# TNPSC - மாதிரி வினாத்தாள் - தமிழ் 001

**காவிரி வடிநில மாவட்ட வேளாண்மை**

**01. மேட்டூரில் இருந்து ஆனி மாதத்தில் நீர் திறந்து மேற்கொள்ளப்படும் சாகுபடியின் பெயர்:**

A . குறுவை ; B. சம்பா; C. தாளடி. D. எதுவும் இல்லை

**02. குறுகிய கால சாகுபடியான குறுவை அறுவடையானதும் அடுத்து தொடங்குவது**

A . பட்டக்கால் ; B. சம்பா; C. **தாளடி**. D. எதுவும் இல்லை

**03. ஐப்பசி மாதம் தொடங்கும் சாகுபடிக்கு என்ன பெயர்?**

A . பட்டக்கால் ; B. **சம்பா**; C. தாளடி. D. எதுவும் இல்லை

**04. மண்வளத்தை மீட்டு எடுப்பதற்காக கோடை காலத்தில் தரிசாக நிலங்கள் விடப்படும். அதாவது தாளடி பயிர் சாகுபடி முடிந்ததும் போதிய தண்ணீர் கிடைக்காத மாதங்களில், தரிசு நிலங்களாக விடப்படும். அந்த நிலங்கள் __________என்றழைக்கப்படும்.**

A . பட்டக்கால் ; B. வெங்கார்; C. பூங்கார். D. எதுவும் இல்லை;

**05. ஆற்றில் தண்ணீர் வரத்தொடங்கியதும், ஆற்றிலிருந்து வயல்களுக்கு முதன் முதலில் பாய்ச்சப்படும் தண்ணீர் __________ என்றழைக்கப்படுகிறது. இதனை ஒரு விழாவாக கொண்டாடுவார்கள்.**

A . பட்டக்கால் ; B. வெங்கார்; C. பூங்கார். D. எதுவும் இல்லை;

**06. பட்டக்கால் என்று இருந்த நிலத்தில் வெங்கார் பாய்ச்சிய பின்னர் வயல் மென்மையாக மாறிவிடும். இதனை _________ என்று சொல்லுவார்கள்**

A . பட்டக்கால் ; B. வெங்கார்; C. பூங்கார். D. எதுவும் இல்லை;

**07. கலப்பை பயன்படுத்தி உழுத தடத்திற்கு _________என்று சொல்லுவார்கள்.**

A . பட்டக்கால் ; B. உழுதசால்; C. பொன்னேர். D. எதுவும் இல்லை;

**08. நிலத்தை உழ பயன்படும் கருவிக்கு பெயர் தான் _______________**

A . பட்டக்கால் ; B. உழுதசால்; C. பொன்னேர். D. எதுவும் இல்லை;

**09. வித விதமான நிலங்களை உழுவதற்கு வித விதமான மாடுகள் பயன்பாடுகளில் இருந்தன.சேற்று நிலங்களை உழுவதற்கென்றே சில மாடுகள் உண்டு. அவற்றை _______________மாடுகள் என்று சொல்லுவார்கள்.**

A . உம்பளாச்சேரி ; B. மொட்டை மாடு; C. வெடுவால். D. எதுவும் இல்லை

**10. மாடுகளின் கொம்புகளை நன்றாக சீவி விடுவார்கள். அப்படி சீவி விடப்பட்ட மாடுகளை _______________என்று சொல்லுவார்கள்.**

A . உம்பளாச்சேரி ; B. மொட்டை மாடு; C. வெடுவால். D. எதுவும் இல்லை

**11. இந்த மாடுகளின் வால்கள் வெள்ளை நிறமாக இருந்தால், அவற்றை ____________என்று சொல்லுவார்கள்.**

A . உம்பளாச்சேரி ; B. மொட்டை மாடு; C. வெடுவால். D. எதுவும் இல்லை

**12. வயல்களில் இடைவெளி விட்டு, நாற்று நடுவதை __________இடுதல் என்று சொல்லுவார்கள்**

A . நாற்றங்கால் ; B. பதியன்கால்; C. தோண்டிக்கால். D. எதுவும் இல்லை

**13. நாற்றை பறித்து எடுத்த இடம் ________________**

A . நாற்றங்கால் ; B. பதியன்கால்; C. தோண்டிக்கால். D. எதுவும் இல்லை

**14. நாற்றங்காலை சுற்றி தண்ணீர் சிரமம் இன்றி செல்லுவதற்கு இழுக்கப்படும் துளையிடப்பட்ட ஒரு கருங்கல் கருவியை _______________என்று சொல்லுவார்கள்.**

A . நாற்றங்கால் ; B. பதியன்கால்; C. தோண்டிக்கால். D. எதுவும் இல்லை

**15. கை நிறையும் வரை நாற்று பறிப்பது _________என்று சொல்லப்படும்**

A . பிடி ; B. முடி; C. கை. D. குப்பை

**16. இரண்டு பிடி நாற்று சேர்ந்தால், அதை _______என்று சொல்லுவார்கள்**

A . பிடி ; B. முடி; C. கை. D. குப்பை

**17. ஐந்து முடி நாற்று ஒரு _________**

A . பிடி ; B. முடி; C. கை. D. குப்பை

**18. இரண்டு கை சேர்ந்தது ஒரு ________**

A . கட்டு ; B. முடி; C. கை. D. குப்பை

**19. நாற்று நாடும் இடைவெளிக்கு ஒரு பெயருண்டு. கட்டை விரலையும், ஆட்காட்டி விரலையும் முடிந்தவரை விலக்கி பிடித்தால், ஏற்படும் இடைவெளிக்கு ________என்று பெயர்.**

A . கட்டு ; B. முதல்; C. ஒட்டை. D. குப்பை

**20. ஒரு நாற்று முடியிலிருந்து மூன்று நான்கு நாற்றுகளை மட்டும் கிள்ளி வயலில் நடுவார்கள். இப்படியாக நட்ட நாற்றின் பெயர் ___________**

A . கட்டு ; B. முதல்; C. ஒட்டை. D. குப்பை

---::: :::---